# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 5 | நவம்பர் 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 5 | November 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



உணர் மனம் – 3

# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
# 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், **சேலம் ஸ்ரீ பகவத் பவனில்** நடைபெற உள்ளது.

நாள் : **24-12-21** காலை **9.00** மணி முதல் **26-12-21** மதியம் **3.00** மணி வரை

இடம் : **சேலம், ஸ்ரீபகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பைக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po), சேலம்.





ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 23-12-21 வியாழக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் குழந்தைகளையும் மற்றவர்களையும் அழைத்து வருவதை கட்டாயம் தவிர்க்க வேண்டுகிறோம்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

ஞானமுகாமில் 75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே 15-12-21 ஆம் தேதிக்குள் அவசியம் முன் பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox Copy உடன் December Gnanamuhaam என Type செய்து Whatsapp அனுப்ப வேண்டிய எண் : **9942219065**

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும். சேலம் ஜங்சன் இரயில் நிலையம் - புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் வழி அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் -பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)

பெரிய கவுண்டாபுரம் - (கொடம்பக்காடு)
ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.



தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

(i) Single Bed Room - 8 மட்டும் உள்ளது.

(ii) Double Bed Room - 8 மட்டும் உள்ளது.

இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம். ஒரு அறையில் இணைந்து தங்குபவர்கள் இந்த கட்டணத்தை பகிர்ந்து (Sharing) கொள்ளலாம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம். தொடர்புக்கு : **7904118421**

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?



Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

# உணர் மனம் – 3



- ஸ்ரீ பகவத்

**உணர் மனம்** என்றால் என்ன, **முழு மனம்** என்றால் என்ன என்பதை ஒரு தொடராகப் பார்த்து வருகிறோம்.

முழு மனதின் அங்கமாக, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவை இடம் பெற்றிருப்பதைப் போல்,

உணர் மனதிலும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் நால்வகை அம்சங்களும் இடம் பெற்றிருக்கின்றன.




மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் இந்த நால்வகை அம்சங்களும் முழு மனதிலும் உள்ளன; உணர் மனதிலும் உள்ளன.

இவை முழு மனதில் செயல்படும்போது பிரித்துப் பார்க்க முடியாத வகையில் மொத்தமாகச் செயல்படுகின்றன.

அங்கு, தாமாக நடக்கும் செயல் மட்டுமே உள்ளது. தடுமாற்றம் இல்லாத செயல் மட்டுமே உள்ளது.

உணர் மனதைப் பொருத்த அளவில் அங்கு புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றுக்கென தனிப்பட்ட செயல்கள் இருக்கின்றன.

ஆயினும் அவை தலா 10% சக்தியை மட்டுமே உடையவையாக உள்ளன. ஆகையினால் அவை முழு மனதிலிருப்பதைப் போன்ற சக்தி உடையவையாக இல்லை.

உணர் மனதைப் பொருத்த அளவில் உணருந்தன்மைதான் பிரதான அம்சமுடையது. அது மிகவும் அழகானது. கள்ளங்கபடமற்றது.

அது உலகையும், நம்மையும் ஒன்றாக இணைக்கிறது.

உணருந்தன்மை 70% சக்தியுடையதாக இருந்தபோதிலும்,

அது, எதற்கு வேண்டுமானாலும், தன்னை விட்டுக் கொடுக்கும் தன்மையில் உள்ளதால்,

புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் 30% க்குத் தன்னை விட்டுக் கொடுத்து விடுகிறது.

அடங்கிப் போக வேண்டிய அந்த மூன்றும், பலவகையான பிரச்சினைகளுக்கும் காரணமாகி விடுகின்றன.

மேலும் நாம் ஆய்ந்திடுவதற்கு முன்னால் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றால் என்ன என்பதையும் அவற்றின் செயல்பாட்டையும் ஒரு முறை பார்த்து விடுவோம்.

மனம் என்பது சாதகபாதகமான பல செய்திகளையும் ஆய்வுக்கு எடுத்துக் கொடுக்கும் ஓர் ஆலோசகர் மட்டுமே.

தேவையானவற்றையும், தேவையில்லாத வற்றையும்கூட அவர் காட்டி விடுவார்.

அவர் எடுத்துக் கொடுக்கும் தகவல்கள் அனைத்தையும் வகைப்படுத்தி நமக்குத் தேவையான முடிவினை எடுப்பதுதான் புத்தி.

புத்தி எடுக்கும் முடிவானது நமது சித்தத்தில் பிரதிபலிக்கும் போது அதற்கேற்ற உணர்ச்சிகள்

வெளிப்படுகின்றன.

அப்படி விளைவாக வெளிப்படும் உணர்ச்சிகளே அகங்காரம் எனும் பெயரைப் பெறுகிறது.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளுக்கு ஏற்ப நாமும் நமது செயல்களை மேற்கொள்கிறோம்.

இங்கு பிரச்சினை எவ்வாறு உருவாகிறது?

நமக்கு ஏற்படும் பிரச்சினைக்கு எது காரணம்?

நாம் எடுக்கும் பொறுப்புகள்தாம் சுமையாக இருந்து நம்மை அழுத்துகின்றன.

பொறுப்பை உருவாக்குவது யார்?

பொறுப்பைச் சுமப்பது யார்?

நமது முழு மனதே நமது செயல்கள் அனைத்தையும் செய்து முடித்தாலும் அது எந்தப் பொறுப்பையும் எடுத்துச் சுமப்பதில்லை.

செயல் மட்டுமே அங்கு இருக்கிறது. செயல்படுவது மட்டுமே முழு மனதின் வேலை.

பொறுப்புகளைச் சுமப்பது முழு மனதின் வேலையல்ல.

உணர் மனதுதான் பொறுப்புகளைச் சுமந்து திண்டாடி விடுகிறது?

அது எவ்வாறு பொறுப்புகளை எடுத்துக் கொள்கிறது?

உணர் மனதின் எந்தப் பகுதி இவ்வாறு பொறுப்புகளை எடுத்துக் கொள்கிறது?

உணர் மனதின் பெரும்பாலான அம்சமான உணருந்தன்மைதான் இந்தப் பொறுப்பைச் சுமக்கிறதா?

அது ஒரு கள்ளங்கபடமற்ற குழந்தை என்று பார்த்தோம். அதனால் அது எந்தப் பொறுப்பையும் எக்காலத்திலும் எடுப்பதில்லை. அது எடுப்பார் கைப்பிள்ளை என அனைத்தோடும் இணைந்து கொள்கிறது.

ஆகவே அது நமது பொறுப்புகளைச் சுமப்பதில்லை.

அப்படியானால் பொறுப்பைச் சுமப்பது யார்?

நம்முடைய நான் என்னும் அகங்காரந்தான், **என்னால் முடியும், நான் செய்வேன்** என்று கூறி பொறுப்புகளை எடுத்துச் சுமந்து கொள்கிறதா?

அப்படிதான் தோன்றுகிறது.

**நான்** எனும் அகங்காரத்தைப் பற்றியும் சற்று ஆய்ந்திடுவோம்.

அகங்காரம் என்பது நமது மன இயக்கத்தின் நான்காவது அடுக்காக வருகிறது.

சித்தத்தின் தொடர்பினால் நமக்கு ஏற்படும் மனோ அனுபவங்களை நாம் அகங்காரம் என்ற பெயரிட்டு அழைக்கிறோம்.

மனோ அனுபவங்கள் அனைத்தும் வெளிப்பாடுகள் மட்டுமே.

அந்த வெளிப்பாடுகள் மகிழ்ச்சியாக இருக்கலாம் அல்லது வருத்தமான உணர்ச்சிகளாக இருக்கலாம்.

அவை எத்தகைய உணர்ச்சிகளாக இருந்தாலும்கூட அவை அனைத்தும் இயற்கையாகத் தோன்றியவையே. அவை அனைத்தும் அழகானவையே.

நம்மிடம் வெளிப்படும் அத்தனை உணர்ச்சிகளுமே **அகங்காரம்** என்ற பெயரைத் தாங்கியிருந்தாலும் அவை அனைத்தும் அழகானவையே.

நாம் இருக்கிறோம் என்பதற்கு அடையாளமே நமது மனோ உணர்வுகள் தாம்.

அவை இயற்கையான முறையில் கணந்தோறும் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

அவை அப்படி ஏற்படுவதுதான் சரியானது. அவையும் அப்படித்தான் ஏற்பட்டவாறும் உள்ளன.

நாம் நமது பொறுப்புகளைச் சுமப்பதற்கு நம் மனதின் பிரதான அம்சமான உணருந்தன்மை காரணமில்லை எனப் பார்த்து விட்டோம்.

அகங்காரமும் காரணமில்லை என்று பார்த்து விட்டோம்.

நமது பொறுப்புகளைச் சுமந்து துன்பப்படுவது நமது இயல்புகளாக இருக்கும் நமது **சித்தமா ?**

நமது இயல்புகள் அனைத்தும் நமது மனப் பதிவுகளே.

– நமது மனதின் இயற்கையான கட்டமைப்பு மட்டுமே.

அவை அனைத்தும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் இயந்திரகதியாக இயங்கி மட்டுமே செயல்படுகிறது.

பொறுப்பை ஏற்றுச் செயல்படும் அமைப்பு எதுவும் அங்கு கிடையாது.

உணர் மனதின் நான்கு பகுதிகளான, உணருந் தன்மை, புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றில் புத்தியைத் தவிர அனைத்தையும் பார்த்துவிட்டோம்.

**புத்தி** இந்த உணர் மனதில் எவ்வாறு செயல்படுகிறது என்பதையும் பார்த்துவிடலாம்.

உணர் மனதிலும் புத்தி இருக்கிறது; முழு மனதிலும் புத்தி இருக்கிறது.

முழு மனதின் புத்தி, சக்தி வாய்ந்தது. அதனால் தீர்க்கமான எந்த முடிவையும் அந்த புத்தியினால் எடுக்க முடியும்.

ஆனால் உணர் மனதின் புத்தி மிகவும் பலவீனமானது. வெறும் 10% சக்தியை மட்டுமே உடையது.

தீர்மானமான முடிவை அதனால் எடுக்க முடியாத காரணத்தினால் அதுவே ஒவ்வொன்றையும், வேண்டும் அல்லது வேண்டாம் என, மாற்றி மாற்றித் தேர்வு செய்ய ஆரம்பித்து விடுகின்றது.

உணர் மனதின் இத்தகைய புத்தியின் காரணமாகவே, உணர் மனம், **மனம்** என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

அலைபாயும் தன்மை உடையதாகவே நமது மனம் விவரிக்கப்படுகிறது. அதற்கு உணர் மனதின் பகுதியாக இருக்கும் புத்தியே காரணமாக இருக்கிறது.

அப்படியானால், உணர் மனம் பொறுப்புகளைச் சுமப்பதற்கான காரணம், அதிலிருக்கும் புத்தி தானா?

புத்திதான் பொறுப்புகளை எடுத்து சங்கடப் படுகிறதா?

அப்படியும் கூறிவிடலாம்.

ஆனால் புத்தி மட்டுமே முழுமையான காரணமல்ல.

நமக்கு ஏற்படும் இன்பமான மற்றும் துன்பமான மன அனுபவங்களை,

"வேண்டும்" அல்லது "வேண்டாம்" என்ற நிலையில் தரம் பிரிப்பதன் மூலம் புத்தியானது

அகங்காரத்தோடு இணைந்து கொள்கிறது.

அனுபவங்கள் அனைத்தும் வேண்டிய அனுபவம் அல்லது வேண்டாத அனுபவம் என்ற தன்மையை எடுத்துக் கொள்கின்றன.

உணர் மனதினுடைய வெளிப்பாடாக ஒவ்வொரு கணந்தோறும் ஏதாவது ஒரு மனோ அனுபவம் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கிறது.

அகங்காரம் எனும் நமது மனோ அனுபவத்தை நமது புத்தியானது "வேண்டும்" அல்லது "வேண்டாம்" எனத் தேர்வு செய்யும் நிலையில்,

நமது அகங்காரம் என்பது **மமகாரம்** என்ற தன்மையை அடைகிறது.

மமகாரம் என்றால் **என்னுடையது** என்று பொருள்.

**கடமையைச் செய். பலன் மீது பற்று வைத்து பலனை எதிர்பாராதே–** என்ற உபதேசமுங்கூட இதற்குப் பொருந்தி வருகிறது.

பலன் என்பது இங்கு மனோ அனுபவங்களையே குறிக்கிறது; அகங்காரத்தையே குறிக்கிறது.

ஒவ்வொரு சூழ்நிலையிலும் நமக்குச் செயல் இருக்கிறது.

சூழ்நிலையை அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்வதுதான், நாம் செயல்படுவதற்கான முதற்படி.

சூழ்நிலை எவ்வாறு உள்ளது என்பதை அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்வது முதற்படி.

அந்த சூழ்நிலையில் நாம் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதை அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்வது இரண்டாவது படி.

இவ்வாறு நமது புத்தி செயல்படுவதில் எந்தத் தவறும் கிடையாது.

**என்ன செய்ய வேண்டும்** என்பதற்குப் பதிலாக, **என்ன விதமான அனுபவம் ஏற்படவேண்டும்,**

– என்ற ரீதியில் நமது புத்தி செயல்படுமேயானால், அங்கு மமகாரம் உருவாகிவிடுகிறது.

உணர் மனதின் 70% ஆக இருக்கும் உணருந் தன்மையில் தவறு எதுவும் கிடையாது.

என்ன நடந்துகொண்டிருக்கிறது எவ்வாறு செயல்பட வேண்டும் எனப் புரிந்து கொள்ளும் புத்தியிலும் எந்தத் தவறும் கிடையாது.

தனது இயற்கை அமைப்பில் சித்தம் இயற்கையாகச் செயல்படுவதிலும், அது பலவிதமான மன அனுபவங்களை இயற்கையாகவே ஏற்படுத்துவதிலும் தவறு எதுவும் கிடையாது.

அகங்காரம் என்று கூறக்கூடிய அனைத்து மனோ அனுபவங்களிலும் – அகங்காரத்திலும் எந்தத் தவறும் கிடையாது.

புத்தியானது, மனோ அனுபவங்களுக்கு முக்கியத்துவமளித்து அவற்றைத் தேர்வு செய்யும் நிலையிலேயே, அகங்காரம் அனைத்தும் மமகாரமாக வடிவெடுத்து நமது அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணமாகிவிடுகிறது.

தனது தவறான அணுகுமுறை தான் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணம் என்பதை நமது புத்தி உணர்ந்திடும் போது, உணர் மனதின் புத்தியானது,

முழு மனதின் புத்தியாக, உயர்வு பெறுகிறது.

முழு மனதின் புத்தியானது செயலை மட்டுமே நிர்வாகம் செய்கிறது.

அது மனோ அனுபவங்களை நிர்வாகம் செய்வதில்லை.

மனோ அனுபவங்கள் அனைத்தையும், முடிந்து போன ஒன்றாகக் கருதி, செய்யவேண்டிய செயல்களுக்கு மட்டுமே நமது புத்தி வழிகாட்டுகின்றது.

★

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் இந்த சக-பயணியின் வணக்கம்.

இனிய **தீபாவளி நல்வாழ்த்துகளை** அய்யாவின் சார்பிலும், எங்கள் அனைவரது சார்பிலும் உங்கள் அனைவருக்கும் தெரிவித்துக் கொள்கிறோம்.

தீப ஒளி, சுய ஒளியாய் சுடர் விடுவது போல் நாம் பெறும் ஞான ஒளி சுய ஒளியாக இருந்து வாழ்வை வளமாக்கட்டும்.

நமது பகவத் பாதை மாத இதழ் தொடங்கி இந்த மாதத்தோடு 10 ஆண்டுகள் நிறைவு பெற்று 11 ஆம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறோம் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஒரு சிலர் நமது மாத இதழ்களை ஒன்றுகூட விடாமல் பாதுகாத்து வருவதாக கூறியிருக்கிறார்கள்.

தற்போது நமது மாத இதழைப் படிப்பவர்கள் பழைய இதழ்கள் கிடைக்குமா என்றும் கேட்டுவருகிறார்கள்.

நமது பகவத் பாதை மாத இதழ்களை ஆரம்பம் முதல் இன்று வரை உள்ள அனைத்து இதழ்களையும் PDF file ஆக, வேண்டியவர்கள் அனைவரும் பெறும் வகையில் Telegram app-ல் Sri Bagavath Pathai Tamil என்ற முகவரியில் யார் வேண்டுமானாலும் free download செய்துக்கொள்ளும்படி சேமித்து வருகிறோம். தேவையானவர்கள் இதனை பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் ஒவ்வொரு இதழிலும் ஒவ்வொரு கோணத்தில் ஞானப் புரிதலை வழங்குவது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

ஞானம் என்ற உண்மையை பல்வேறு கோணங்களில் அணுகும்போது புரியாதவர்களுக்குக் கூட ஏதோ ஒரு கோணத்தில் புரிந்து விடுகிறது.

ஞானம் என்ற மனதின் இயக்க உண்மையை நாம் ஏதோ ஒரு கோணத்தில் புரிந்து கொண்டால் போதும். எல்லா கோணங்களிலும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற கட்டாயமில்லை.

உண்மையில் **நாம் நம் அறிவைக்கொண்டு அறிவின் இயலாமையை புரிந்து கொள்கிறோம்** அவ்வளவே.

இதை எந்த கோணத்தில் புரிந்து கொண்டாலும் சரியே.

அந்தப் புரிதலே அகச் சரணாகதியை வழங்கி விடுகிறது.

**அகச் சரணாகதி அடைந்த நிலையில் நம் மனம் பூரணத்துவம் பெற்று விடுதலையோடு இயங்கத் தொடங்கி விடுகிறது.**

விடுதலை பெற்ற மன இயக்கத்தில் எந்தப் பிரச்சனைகளும் தங்குவதில்லை.

இதுவே மனிதகுலம் அடையவேண்டிய மிக உன்னதமான நிலை.

இந்த ஞானத் தெளிவை மனித குலம் முழுவதற்கும் கொண்டு சென்று அனைவரும் அக விடுதலையோடு வாழ்வதற்கு வழி செய்வதே ஸ்ரீபகவத் மிஷனின் நோக்கம்.

இத்தொண்டில் தங்களையும் இணைத்துக்கொண்டு புரவலராகவும் ஸ்ரீபகவத் பவன் நிறுவனராகவும் நன்கொடை வழங்கிய நல் உள்ளங்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் 14-10-21 அன்று சென்னையில் இருந்து திருச்செந்தூர் செல்லும் போது இடையில் சேலம் ஸ்ரீபகவத் பவனில் ஒரு நாள் தங்கிச் சென்றார்.

இதேபோல் திருச்செந்தூரில் இருந்து சென்னை செல்லும் போது 22-10-21 அன்று சேலம் வந்து ஸ்ரீபகவத் பவனில் இரண்டு நாட்கள் தங்கிச் சென்றார்.

அதுசமயம் அய்யாவை சந்தித்து மீண்டும் நேரடியான ஞான முகாம் நடத்துவது பற்றி கலந்தாய்வு செய்தோம்.

எனவே வருகின்ற டிசம்பர் மாதம் 24ஆம் தேதி வெள்ளிக்கிழமை தொடங்கி 26ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை வரை மூன்று நாள் ஞான முகாம் சேலம் ஸ்ரீபகவத் பவனில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

இதன் விவரத்தை இம்மாத இதழில் வழங்கியுள்ளோம்.

இம்முகாமில் கலந்து கொள்ள ஆர்வமுள்ளவர்கள் முன்பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

இத்தனை காலம் விடை கிடைக்காத புதிராக இருந்த ஞானத்தை, புரிதலாக எளிமைப்படுத்தி புரிதலாக கொடுத்த ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மனித குலத்திற்கு இயற்கை கொடுத்த வரம். நமக்குக் கிடைத்த வரத்தை அனைவருக்கும் கொண்டு செல்வோம்.

V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

## புரிந்து கொண்டால் எல்லாம் மாறி விடுமா?

**கேள்வி** : நான் ஸ்ரீபகவத் ஐயாவின் புத்தகங்களை தொடர்ந்து படித்து வருகிறேன். அவரது வீடியோக்களை தொடர்ந்து பார்த்துக்கொண்டு வருகிறேன். புரிதல் என்றால் என்ன என்பதை ஓரளவிற்கு புரிந்து கொள்ள முடிகிறது. இப்படிப் புரிந்து கொள்வதின் மூலமாக நான் எதிர்கொள்ளும் எல்லாப் பிரச்சினைகளும் மாறிவிடுமா? தீர்வு கிடைக்குமா?

**பதில்:** நீங்கள் கேட்டிருக்கும் இந்த கேள்வி புரிதலில் பயணிக்கும் பலரும் கேட்க கூடிய ஒரு பொதுவான கேள்வி. நிச்சயமாக மாறிவிடும் என்பதே இந்தக் கேள்விக்கான பதில்.

அதற்கு நாம் மனதின் இயக்கத்தைப் பற்றிய மூன்று விஷயங்களை மிகத்தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

அவைகள்

1. புரிதலுக்கு முன் நம் மனநிலை எப்படி இருந்தது?

2. நாம் ஞானப் புரிதல் என்று எதை புரிந்து கொண்டோம்?

3. புரிந்து கொண்ட பிறகு நம் மனநிலை எப்படி இருக்க வேண்டும்?

புரிதலுக்கு முன் நம் மனநிலை எப்படி இருந்தது என்பதைப் பார்ப்போம்.

நாம் நினைத்தபடி நடந்தவரை நமக்கு எந்தத் தொந்தரவும் இல்லை. நாம் நினைத்தது நடக்காதபோது அதற்கு காரணமான பொருட்களை மாற்ற தொடங்கினோம். உதாரணமாக, இந்த வீடு சரியில்லை, இங்கு வந்ததிலிருந்து எதுவும் சரியில்லை, இந்த கார் சரி இல்லை, இந்த வண்டி சரி இல்லை, இந்த பொருள் வந்ததிலிருந்து நான் சரியில்லை என்று பொருட்களின் மீது குற்றம் சாட்டுகிறோம்.

பிறகு நம்மோடு தொடர்புடைய நபர்களான குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள், உறவுகள் என மற்றவர்களை குறை கூறுகிறோம். நான் நினைக்கும்படி இவர்களை மாற்றினால் எனக்கு எல்லாம் நன்றாக இருக்கும் என்று எண்ணுகிறோம். பிறகு இதில் எதையும் நம்மால் மாற்ற முடியாது என்பதை பல தோல்விகளுக்குப் பிறகு ஒரு கட்டத்தில் புரிந்து கொள்கிறோம்.

பிறகு நமது பிரச்சனைக்கு மற்ற பொருட்கள், மற்ற நபர்கள் காரணம் அல்ல. நம்முடைய மனம்தான் காரணம் என்பதை நாம் தெளிவாக விளங்கிக்கொள்கிறோம். பிறகு நம்மையே நாம் சரியில்லை, எனக்கு வரும் எண்ணங்கள் சரியில்லை, எனக்கு வரும் உணர்வுகள் சரியில்லை, எனக்குள் இருந்து வரும் இயல்புகள் சரியில்லை என்று குறை கூற தொடங்குகிறோம். எனக்கு ஏற்படும் எதிர்மறையான எண்ணங்கள், எனக்கு ஏற்படும் மோசமான உணர்வுகள், வெளியில் சொல்லவே அசிங்கமாக இருக்கும் மன இயல்புகள் என இப்படி பலவும் சேர்ந்து, ஒட்டுமொத்தமாக நான் சரியில்லை. அதனால் என் மனதை மாற்ற வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறோம்.

மனதை நாம் விரும்பியபடி மாற்றி அமைப்பதற்காகத்தான் நாம் ஆன்மிகத்தை நோக்கி பயணிக்கிறோம். ஆன்மிகத்தில் கொடுக்கப்பட்ட அத்தனை பயிற்சி முயற்சிகளையும் நாம் முறையாக முயன்று பார்க்கிறோம். எல்லாவற்றிலும் ஓரளவிற்கு உதவி கிடைத்தாலும் முழுமையான தீர்வு எதிலும் கிடைக்கவில்லை.

நமது பயிற்சியில் தீவிரம் காட்டுகிறோம், நமது முயற்சியில் தீவிரம் காட்டுகிறோம். ஆனால் எல்லாவற்றிலும் தோல்வியை மட்டுமே சந்திக்கிறோம். அப்பொழுதும்கூட, நாம் நம்மைதான் குறை காணத்தான் தொடங்குகிறோம். 'பயிற்சியைக் கொடுத்தவர்கள் சரியாகத்தான் கொடுத்திருப்பார்கள், நாம்தான் சரியாகச் செய்யவில்லை' என்று நினைத்துக்கொண்டு மீண்டும் நம்மைதான் திரும்பவும் நாம் குற்றம் சாட்டிக்கொள்கிறோம். அந்த

ஆன்மிக அமைப்பில் நமக்கு முன் பயிற்சி பெற்று சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள், பயிற்சியாளர்கள் பலரும் இருப்பார்கள். அவர்களின் செயல்பாடுகளை நம் செயல்பாடுகளுடன் ஒப்பிடும்போது அவர்களை காட்டிலும் நாம் இருக்கும் நிலையே எவ்வளவோ பரவாயில்லை என்ற எண்ணமே நமக்கு வருகிறது. மேலும் அவர்கள் கூறும் வழிமுறைகள், கருத்துகள் நமக்கு நிறைவைஅளிப்பதாக இல்லை. வழி தெரியாமல் தவிக்கும் நமக்கு ஏதாவது வழி கிடைக்காதா என்று மனமுடைந்த நிலையில் ஏங்கி நிற்கின்றோம்.

மனித குலத்தின் ஒட்டுமொத்த மன துன்பத்திற்கே தீர்வாக ஸ்ரீபகவத் ஐயாவின் அரிய கண்டுபிடிப்பான மனதின் இயக்கத்தைப் பற்றிய புரிதல் என்னும் மாமருந்து தீர்வாக கிடைக்கிறது.

அதன் பிறகுதான் மன இயக்கம் எப்படி செயல்படுகிறது என்பதைப் பற்றிய புரிதலே நமக்கு ஏற்படுகிறது.

புரிதல் என்றால் என்ன ?

நாம் எதைப் புரிந்து கொள்ள வேண்டும்?

நமது மனதின் இயக்கம் நமக்கு கட்டுப்பட்டது கிடையாது, அது முற்றிலும் இயற்கையானது என்பதை புரிந்து கொள்வது தான் ஞானம்.

நாம் சிறு குழந்தையாக இருக்கிற பொழுது எல்லா எண்ண உணர்வுகளும் தங்கு தடை இல்லாமல், தோன்றி மறையும் விடுதலை இயக்கத்துடன்தான் இருந்து வந்துள்ளோம். பருவ வயதை அடைந்து அறிவின் வளர்ச்சி பெற்ற பிறகு இந்த விடுதலை இயக்கத்தில் நமது அறிவு குறுக்கீடு செய்து போராடுகிறது. இந்தப் போராட்டமே நாம் சந்திக்கும் எல்லாப் பிரச்சினைகளுக்கும் மூல காரணம்.

நமது மனதின் இயக்கம் நமக்கு கட்டுப்பட்டது கிடையாது என்பதை நமது அறிவு பகுதி புரிந்து கொள்கிறது. இப்படி அறிவு புரிந்துகொண்டு மனோ இயக்கத்தை தடையில்லாமல் அதன் போக்கில் செயல்பட அனுமதிப்பது தான் ஞானம்.

இப்படி மன இயக்கம் விடுதலையுடன் இயங்குவதைதான் விடுதலை என்று குறிப்பிடுகிறோம்.

இனி புரிந்து கொண்ட பிறகு நம் மன இயக்கத்தை எப்படி பார்க்க வேண்டும்?

நமது மன இயக்கம் என்பது நமக்கு கட்டுப்பட்டது கிடையாது, நமக்கு ஏற்படும் எண்ணங்களில் நமக்கு எந்த வேலையும் இல்லை, அதே போலதான் நமக்கு ஏற்படும் உணர்வுகளிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்கிறோம்.

ஒரு சூழ்நிலையை நாம் சந்திக்கும் பொழுது, மனதில் நமது இயல்புக்கு ஏற்ப எண்ண உணர்வுகள் வெளிப்படுவதும் இயற்கை. நம் இயல்புகள் வெளிப்பட்ட பிறகுதான் நமக்குள் இப்படி ஓர் இயல்பு நம் மனதில் இருக்கிறது என்பதை நம்மால் அறிய முடிகிறது. நமக்கு தோன்றும் மோசமான எண்ணங்கள், உணர்வுகளாக இருந்தாலும்கூட, முடிந்து போன நிலையில் மட்டுமே நம்மால் அவைகளை அடையாளம் கண்டு உணரமுடிகிறது. எண்ணத்திலும் வேலையில்லை, உணர்விலும் வேலை இல்லை, இயல்புகளிலும் எந்த வேலையும் இல்லை, மொத்தத்தில் மன இயக்கத்திலே நமக்கு எந்த வேலையும் இல்லை என்ற முடிவுக்கு வந்து விடுகிறோம்.

நம்மை நாம் மாற்றுவதற்காக இதுகாறும் எடுத்து வந்த அத்தனை முயற்சிகளிலிருந்தும் விடுபடுகிறோம். எண்ணங்களை சீரமைப்பது, உணர்வுகளை மாற்றியமைப்பது, இயல்புகளை சரி செய்வது போன்ற அனைத்து மன செயல்பாடுகளில் இருந்தும் விடுபடுகிறோம். மன இயக்கம் முற்றிலும் இயற்கையானது, அதில் நமக்கு யாதொரு வேலையும் இல்லை என்பதை அறிவுபூர்வமாக விளங்கிக்கொள்கிறோம்.

நமது அறிவைக் கொண்டு அகத்தில் எதுவும் செய்ய முடியாது என்பதை விளங்கிக்கொள்கிறோம். அகத்தில் ஏற்படும் எண்ண உணர்வுகளுக்கு அறிவைக் கொண்டு தீர்வு செய்யாமல் என்ன எண்ண உணர்வு வந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டு, அதற்குத் தேவையான புறச் செயல்களைச் செய்யும் தன்மைக்கு மாறி விடுகிறோம்.

எண்ணங்கள், உணர்வுகளில் நமக்கு யாதொரு வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்வதே மிக முக்கியமாகப் புரிந்து கொள்ளவேண்டிய விஷயமாக இருக்கிறது. இப்படி நமது மனோ இயக்கத்தில் நமக்கு யாதொரு வேலையும் இல்லை என்பதைப் புரிந்து கொள்வது தான் முதன்மையானது.

இதனைத் தொடர்ந்து நமக்கு வெளிப்படும் எண்ண உணர்வுகளை உணர்ந்து கொண்டு அதற்கான புறத்தில் தேவையான செயல்களை செய்வது என்பது இரண்டாம் பட்சமானது என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும்.

நமக்குள் நாம் ஆய்வு செய்து இந்த

உண்மையை விளங்கி கொள்கிறபோது நமக்கு ஏற்படும் எண்ணத்திலும் உணர்விலும் நாம் எதிர்த்து சண்டையிடுவதிலிருந்து விடுகிறோம்.

அகத்தில் எதையோ மாற்றவேண்டும் என்று சதா போராடிக்கொண்டிருந்து வந்த அறிவு, இனி நம்மால் எதுவுமே முடியாது என்று தன் இயலாமையை உணர்ந்துகொண்டு மன இயக்கத்திலிருந்து விடுபடுகிறது. மனோ இயக்கம் இயற்கையாக இயங்குகிறது. இதுதான் சுதந்திரமான இயக்கம் என்று கூறுகிறோம்.

இப்படி புரிந்து கொள்ளும் பொழுது நாம் சந்திக்கிற அத்தனை நிகழ்வுகளையும் நாம் வேறு ஒரு புதிய கோணத்தில் பார்க்கும் நிலைக்கு வந்து விடுகிறோம்.

புறப்பொருள்கள், மற்ற நபர்கள், நம்முடைய எண்ணங்கள், நம்முடைய உணர்வுகள், இயல்புகள் என எதுவும் மாறாது. எல்லாம் அப்படித்தான் இருக்கும். ஆனால் நாம் பார்க்கும் பார்வையில் முற்றிலும் மாற்றம் ஏற்படும். இந்த மாற்றம் தான் புரிதல். இப்படிப் புரிந்து கொள்வதால் மட்டுமே நம்மால் புரிதலுக்கு பிறகு எல்லா விஷயங்களையும் எளிமையாக எதிர்கொள்ள முடியும்.

மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்ட நிலையில், நமது அணுகுமுறை முற்றிலும் புதிய கோணத்திற்கு மாறிவிடுகிறது.

# ஜென் கதை



## "தலையில் சுமக்கதே"

ஆன்மீகத்தில் விடுதலையைத் தேடி மூன்று இளைஞர்கள் தீவிர முயற்சிகளிலும் பயிற்சிகளிலும் ஈடுபட்டுவந்தனர்.

அனைத்து முயற்சிகளும் தோல்வி அடைந்த நிலையில் ஒரு தலைசிறந்த ஞானியைச் சந்தித்து தங்களது நிலையை எடுத்துக்கூறி அவரிடம் சீடர்களாக இணைந்தனர்.

ஞானி, தான் பெற்ற ஞானத்தை மற்றவர்களுக்கு எளிமையாக வழங்குவதில் வல்லவராக இருந்தார்.

இவர்கள், ஞானியின் செயல்பாட்டைக் கவனித்தனர்.

ஞானி, தனக்கு ஏற்படும் எல்லா பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொண்டு எதிலும் தேங்கி விடாமல் அதற்கான செயல் செய்வதோடு மிகவும் அமைதியாக இருந்தார்.

இது அவர்களுக்கு மிகவும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது.

அவர்கள் அதுபற்றி ஞானியிடம் கேட்பதற்குத் தயங்கினார்கள்.

சீடர்களில் ஒருவன் மட்டும், "சுவாமி நாங்களும் உங்களைப் போல் விடுதலை பெற வேண்டும். ஏதாவது எங்களுக்கு வழி காட்டுங்கள்" என்றான்.

ஞானி வேதங்களிலிருந்தும் ஆன்மிகத் தத்துவங்களில் இருந்தும் பல விளக்கங்கள் கொடுத்தார்.

சீடன், "சுவாமி இதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாக இருக்கிறது. எங்களுக்கு ஏதாவது புரிந்து கொள்ளும்படி விளக்குங்கள்" என்றான்.

ஞானி, "நாம் மிகவும் முக்கியமாகப் புரிந்து கொள்ள வேண்டியது, நம் மனம் எப்படி செயல்படுகிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றார்.

சீடன், "மனதை ஏற்றுக் கொள்ளுதல் என்றால் என்ன என்று புரியவில்லை சுவாமி" என்றான்.

ஞானி, "உன் மன இயக்கத்தை முற்றிலும்

புறக்கணித்து விடு” என்றார்.

சீடன், ”ஏற்றுக்கொள்ளுதல், புறக்கணித்தல் ஒன்றுக்கொன்று முரண்பாடாக உள்ளதே. புரிய வில்லை சுவாமி” என்றான்.

ஞானி, ”சரி, நீ மனதை ஏற்றுக் கொள்ளவும் வேண்டாம் புறக்கணிக்கவும் வேண்டாம். மனதை பாதுகாப்பதிலிருந்து மட்டும் விடுபட்டுவிடு. அது போதும்” என்றார்.

சீடன், ”சுவாமி எங்களை மன்னியுங்கள். நீங்கள் கூறிய அனைத்தும் மீண்டும் குழப்பத்தையே ஏற்படுத்துகிறது. ஏதாவது செயல்முறை விளக்கம் கொடுத்து உதவ முடியுமா?” என்று கேட்டனர்.

ஞானி, ”சரி உங்கள் மூவருக்கும் ஒரு போட்டி வைக்கிறேன். அதில் யார் வெற்றி பெறுகிறீர்கள் என்று பார்ப்போம்” என்றார்.

போட்டியை சீடர்கள் ஆவலுடன் எதிர் நோக்கினர்.

ஒவ்வொருவரையும் அழகிய கண்ணாடிக் குடுவையில் தண்ணீர் நிரப்பி தலையில் சுமந்து கொண்டு அவரவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பணிகளைச் செய்யும்படிக் கூறினார்.

ஞானி சீடர்களிடம், ”கண்ணாடிக் குடுவை ஜாக்கிரதை. உடையாமல் பார்த்துக்கொள்ளுங்கள். மாலை சந்திப்போம்.” என்றார்.

முதலாம் சீடன் தண்ணீர் நிரம்பிய கண்ணாடி குடுவையை தலையில் சுமந்து கொண்டு தனது சமையல் பணியை மிகவும் சிரமத்துடன் செய்து வந்தான்.

கண்ணாடி குடுவையின் மீது கவனத்தை வைத்துக்கொண்டு சமையல் வேலைகளைச் செய்வதில் மிகவும் சிரமப்பட்டான். ஒரு மணி நேரத்துக்குள்ளேயே கண்ணாடிக் குடுவை இடறி கீழே விழுந்து உடைந்துவிட்டது.

அவன் செய்வதறியாது மனமுடைந்து போனான். அதன் பிறகு வேறு வழியில்லாமல் தோல்வியை ஒப்புக் கொண்டு தனது சமையல் வேலையை வழக்கம்போல் செய்தான்.

இரண்டாம் சீடன், மிகவும் சிரமப்பட்டு கண்ணாடிக் குடுவையை தலையில் சுமந்துகொண்டு கிணற்றிலிருந்து நீர் இரைத்துக் கொண்டிருந்தான்.

மதிய வேளையில் அவனை அறியாமல் இடறி கண்ணாடிக் குடுவை கீழே விழுந்து உடைந்தது. தோல்வியால் மதிய உணவை புறக்கணித்து சோர்ந்து போனான். பிறகு வேறு வழியில்லாமல் தனது நீர் இரைக்கும் பணியைத் தொடர்ந்தான்.

மூன்றாம் சீடன் தண்ணீர் குடுவையை தலையில் சுமந்தபடி தோட்டத்தை தூய்மைப் படுத்திக் கொண்டிருந்தான்.

இரண்டிலும் கவனத்தை செலுத்தி மாலை வரை வெகு சிரமத்துடன் தாக்கு பிடித்தான். மாலையில் கால் இடறி அவனுடைய குடுவையும் உடைந்தது. மற்ற இருவரைக் காட்டிலும் இவன் மிகவும் களைத்துப் போயிருந்தான். தனது வேலையைத் தொடர முடியாமல் சோர்வுடன் அமர்ந்துவிட்டான்.

மூவரும் ஒன்றாக இணைந்து ஞானியைச் சந்தித்தனர். தங்களுக்கு நிகழ்ந்ததை எடுத்துரைத்தனர்.

”கண்ணாடிக் குடுவையை ஒருபோதும் பாதுகாக்க முடியாது என்பதை புரிந்து கொண்டீர்களா?” என்றார் ஞானி.

”ஆமாம் சுவாமி” என்றனர்.

”கண்ணாடிக் குடுவையை தலையில் சுமந்து கொண்டு உங்களது தினசரி வேலையைச் சரியாக செய்ய முடியாது என்பது புரிந்ததா?” என்று மீண்டும் கேட்டார்.

”மிகவும் நன்றாகப் புரிந்தது சுவாமி” என்றனர்.

மேலும், ”எங்களுக்கு என்ன நிகழ்ந்தது என்பது புரிந்தது. இதை மன இயக்கத்தோடு இணைத்துக் கூறினால் மிகவும் நன்றாகப் புரியும்.” என்றனர்.

”கண்ணாடிக் குடுவை என்பதுதான் நமது மனம். அதை தலையில் சுமந்து கொண்டு நம்மால் ஒருபோதும் சரியாக நமது வழக்கமான வேலைகளைச் செய்ய முடியாது. மனதைப் பாதுகாப்பதும் கட்டுப்படுத்துவதும் ஒருபோதும் முடியாது. எனவே மன இயக்கத்தை ஏற்றுக் கொண்டு செயல்பட்டாலும் சரி, மன இயக்கத்தை புறக்கணித்து செயல்பட்டாலும் சரி, மொத்தத்தில் மனப் பிடியிலிருந்து விடுபட்டு நமது அன்றாடப் பணிகளைச் செய்வதே சிறப்பு,” என்றார் ஞானி.

சீடர்கள் மூவரும் தாங்கள் இதுவரை பிடித்திருந்த மனப் பிடியில் இருந்து விடுபட்டனர்.

**”மனப் பிடியிலிருந்து விடுபடும் இயக்கமே இயற்கையான விடுதலை இயக்கத்திற்கு மாறிவிடும். விடுதலை இயக்கத்தை நாம் முயன்று கொண்டுவரத் தேவையில்லை. நமது பிடி தளர்ந்தால் போதும். அது தானாகவே நிகழும்.”**

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

தினந்தோறும் Zoom meeting மூலமாக சத்சங்கங்கள் நடத்தி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி சென்னையில் நமது ஸ்ரீபகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

நாம் ஏற்கனவே ஆலோசித்தப்படி, விற்பனைக்கு தயாராக இருந்த இரண்டு பிளாட்களை வாங்குவது என தீர்மானித்த நிலையில் பொருளாதார பற்றாக்குறையால் ஒரு பழைய பிளாட் ஒன்று மட்டும் அனைவரிடமும் உதவி கேட்க அவகாசம் இல்லாததால் நமது மிஷனின் Founderகளாக இருக்கும் உறுப்பினர்கள் சிலரிடம் மட்டும் வட்டியில்லா கடனாக பெற்றும் மேலும் பற்றாக்குறை தொகைக்கு ஐயாவின் குடும்ப நகையை வங்கியில் அடமான கடனாகப் பெற்று அய்யா, தன் மகன் குடும்பத்துடன் தங்கும் வகையில் ஒரு பிளாட் வாங்கிவிட்டோம்.

தற்போது அய்யா எதிர்கொள்ளும் நகை கடன் நிதிப் பிரச்சினைக்கு தேவைப்படும் தொகை ரூபாய் 13 லட்சம். இந்த நகை கடனை திருப்பி செலுத்த வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிறோம்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1. ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதலை உலகம் முழுவதும் கொண்டு செல்வது.

2. ஸ்ரீ பகவத் மிஷனின் இந்தப் பயணத்தில் ஞானத்தை கொண்டு சேர்ப்பதோடு ஐயாவை பராமரித்து அவரது எளிய தேவைகளையும் அவர் கேட்காமலே பூர்த்தி செய்ய வேண்டும் என்பதே நம் அனைவரின் நோக்கம்.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதந்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம்.

ஆனாலும் இது தற்போது போதியதாக இல்லை. மிகவும் பற்றாக்குறையாகவே இருக்கிறது.

தற்போது நகை கடனை அடைக்க வேண்டிய அவசர தேவையில் இருக்கிறோம்.

நன்கொடையாகவோ அல்லது வட்டி இல்லா கடனாகவோ வழங்கி உதவ வாய்ப்புள்ளவர்கள், முன் வருபவர்கள் நம்மோடு தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

பயனடைந்தவர்கள் ஒன்றிணைந்து நமது பயணத்தை தொடர்வோம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்.**

**9994205880, 9789165555.**

## ஸ்ரீ பகவத் மிஷன்

அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷன் தலைவர் **கைலாசம் அய்யா** தமது உடல் நலம் சார்ந்த காரணங்களுக்காக, தாம் வகித்துவரும் தலைவர் பதவியை ராஜினாமா செய்துள்ளார்.

இது முதல் ஸ்ரீபகவத் மிஷன் தலைவராக **ஜீவமணி அய்யா** செயல்படுவார்

செயலாளராக **சரவணன் அய்யா** செயல்படுவார்.

சென்னை **சந்திரசேகர் அய்யா** துணைத் தலைவராகவும்,

பெங்களூர் **பாபுலால் அய்யா** மற்றும் சென்னை **ஆனந்த் அய்யா** ஆகியோர் துணைச் செயலாளர்களாகவும் செயல்படுவார்கள்.

இவர்கள் அனைவருக்கும் நமது நல்வாழ்த்துகள்.

நமது குடும்பத்தினர் அனைவரும் தங்களது மேலான ஒத்துழைப்பை இவர்களுக்கு வழங்கிடுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

இவண்

அன்புடன் **ஸ்ரீ பகவத்.**

# நிகழ்ச்சி நிழல்கள்


ஆழ்ந்த சிந்தனையில்..


உணவருந்தி தளர்வாக...

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555




மனித குலத்துக்கே ஞானத்தை ஊட்டியவர், தன் பேரக் குழந்தைக்கு வேடிக்கை காட்டி உணவு ஊட்டும் அன்பு தாத்தாவாக...






ஐயாவின் அனைத்து நூல்களையும் கொளத்தூர் (மேட்டூர்) நூலகத்துக்கு திரு. சிவக்குமார் அவர்கள் அன்பளிப்பாக வழங்கியபோது...






ஸ்ரீ பகவத் மிஷன் எதிர்காலத் திட்டங்கள் பற்றிய கலந்தாய்வின் போது.